2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவுஎண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 ★ மதுரை 26—11—75 புதன் ★ மலர் 248

## தேர்வில் காப்பி அடித்தால்

## டி. ஐ. ஆர்.

ஸ்ரீநகர், நவ. 23—

இங்குள்ள இஸ்லாமியக் கல்லூரி ஒன்றில் நடைபெற்ற தேர்வில், பார்த்து எழுதின மாணவர்கள் இந்திய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டார்கள். அவர்கள் காப்பியடித்து எழுதும்போது கையும் களவுமாக பிடிபட்டார்களாம்.

## இரண்டு கோடி ஆண்டுகளுக்கு முந்திய மரம்

புதுடெல்லி, நவ. 23—

இரண்டு கோடி ஆண்டுகளுக்கு முந்திய மரத்தின் அடிமரம் இங்குள்ள தேசிய மியூசியத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. பாண்டிச்சேரியிலிருந்து 21 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள திருவாரக்காரை பகுதியில் உந்திய மண் ஆராய்ச்சி சர்வேயினரால் இது கண்டுபிடிக்கப்பட்டது.

## கான்பூர் சணல் ஆலை தேர்தல்

## 3 இடங்களையும் சி ஐ டி யூ கைப்பற்றியது

### ஐ என் டி யூ சி, ஏஐடியூசி எச்எம்எஸ் மண்ணைக் கவ்வின

கான்பூர், நவ. 24—

பிரதமர் இந்திராவின் சொந்த மாநிலமான உத்திரப் பிரதேசத்தில் உள்ள முக்கியதொழில் நகரமான கான்பூரில், ஜெ கே சணல் ஆலையில் பிராவிடண்ட் பண்டு கமிட்டிக்குநடந்த தேர்தலில் சிஐடியூ மகத்தான வெற்றி பெற்றது. தேர்தல் நடந்த 3 இடங்களிலும் சிஐடியூ வேட்பாளர்களே வாகை சூடினர்,

சிஐடியூ வேட்பாளர்கள்மூவரும் முறையே 1764, 1562, 1053 வாக்குகள்பெற்றனர். எதிர்த்துப் போட்டியிட்ட ஐஎன்டியூசி வேட்பாளர்களும் ஏஐடியூசி வேட்பாளர்களும் 200 வாக்குகள்கூட பெற முடியவில்லை. எச் எம் எஸ் சார்பில் போட்டியிட்ட இரு வேட்பாளர்கள் முறையே 400 வாக்குகளும் 500 வாக்குகளும்தான் பெற்றனர்,

முதலில் 8·33 சதவீதம் போனஸ் அளிப்பதாக அறிவித்த இந்த ஆலை நிர்வாகம், அவ்வாறு போனஸ் வழங்காமல் பின்வாங்கியது. போனசைக்குறைத்துத்தர முன் வந்தது. இந்த அக்கிரமத்தை எதிர்த்துப் போராடினர் தொழிலாளர்கள். இப்போராட்டத்தில் சி ஐ டி யூ உறுதியாக தொழிலாளர் பக்கம் நின்றது. எனவே, ஆட்குறைப்பு, சி ஐ டி யூ சங்க முன்னணி ஊழியர்களை சஸ்பெண்ட் செய்தல் போன்ற அடக்கு முறை பழிவாங்கல் நடவடிக்கைகளை நிர்வாகம் மேற்கொண்டது.

ஆனாலும் தொழிலாளர் உறுதி தளராது தமக்கு உற்ற தோழனாக நின்ற சி ஐ டி யூ வையே இந்த பிராவிடண்ட் பண்ட் கமிட்டித் தேர்தலில் தொழிலாளர்கள் தேர்ந்தெடுத்தனர். இந்த வெற்றியானது சணல் தொழிலாளர்கள் மத்தியிலும் கான்பூர் நகரத்தின் இதர பகுதி தொழிலாளர்கள் மத்தியிலும் மிகுந்த உற்சாகத்தையும் நம்பிக்கையையும் ஊட்டியுள்ளது.

## வங்கத்தில் முஜிபுர் ஆதரவாளர்

## மீண்டும் ஒருவர் கொலை

### கடும் பத்திரிகை தணிக்கை

லண்டன், நவ. 23—

பங்களா தேசத்தில் ராணுவ மோதல்கள் தொடர்ந்து நீடிப்பதாகவே தெரிகிறது. முஜிபுர் ரஹ்மான் ஆதரவாளர் எனக் கூறப்பட்ட பிரிகேடியர்கலித் முஷ்ராப்பையும் ஏனையோரையும் ராணுவத் தளபதி ஜியாவூர் ரஹ்மான் கோஷ்டியினர் கொலைசெய்து விட்டனராம்.

முஜிபுர் ரஹ்மானுக்குப் பிறகு பங்களாதேச ஜனாதிபதியாக வந்த முஸ்தாக் வீழ்ச்சியடைந்தவுடன் அவரது பதவியை கைப்பற்றியவர் கலித்முஷ்ராப் அப்பதவியில் இரண்டு மூன்று நாட்களே நீடித்தார். அதன் பின்பு அங்நாட்டு சுப்ரீம கோர்ட் நீதிபதி சயீம் ஜனாதிபதி ஆனார். ஜியாவூர் ரஹ்மான் ராணுவத தளபதியானார்.

எனினும் கலித்முஷ்ரா கோஷ்டியினருக்கும் ஜியாவூர் ரஹ்மானுக்குமிடையே வேறுபாடு வலுத்தது. தனது இரண்டு மூன்று நாள் அதிகாரத்திற்கு பிறகு முஷ்ராப் தலைமறைவாகிவிட்டார் எனவும் கூறப்பட்டது.

ஏற்கனவே, கடந்த வாரம் ஜியாவூர் ரஹ்மான் ரேடியோவில் பேசும் போது ராணுவத்தில் ஒரு போட்டி சக்தி செயல்படுகிறது என்றும் அதுநாட்டின் ஸ்திர நிலைமையை சீர் குலைக்க முயற்சிக்கிறது என்றும் கூறினர்.

பங்களாதேசத்தின் தலைநகர் டாக்காவின் முக்கியப் பகுதிகளில் ராணுவத்தினரைக் கொண்ட டாங்குகள் நிறுத்தப்பட்டுள்ளன.

பத்திரிகைகள் கடும் தணிக்கைக்கு உள்ளாக்கப் பட்டுள்ளன. வெளிநாட்டு நிருபர்கள் பங்களாதேசத்திற்குள் நுழைவது தடுக்கப் பட்டுள்ளது. சர்வதேச தொலைபேசிச் செய்திகளை அனுப்பவும் வாங்கவுமகூடிய மத்திய தொலைபேசி நிலையம் மூடப்பட்டது.

## போனஸ் அவசரச்சட்டம்:

## கரூர் எல். ஐ. சி. ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்

கரூர், நவ. 24—

அண்மையில் ஜனாதிபதி பிறப்பித்த போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்தை ஆட்சேமித்தும், அதை உடனே வாபஸ்பெற கோரியும் கடந்த 20ந்தேதி மாலை இங்குள்ள எல் ஐ சி அலுவலக வாயில் முன் எல் ஐ சி ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

அகில இந்திய இன்சூரன்ஸ் ஊழியர் சங்க கிளை சார்பில் நடந்த இந்த ஆர்ப்பாட்டத்தில் வங்கி ஊழியர்களும். சி ஐ டி யூ வைச் சேர்ந்த தோழர்களும, இதர சகோதரதொழிலாளர்களும் கலந்து கொணடு முழக்கங்கள் எழுப்பினர். இறுதியில் நடந்த கூட்டத்தில் தோழர் குப்புசாமி பேசினர்.

### வளரும் நாடுகளுக்கான

## அன்னிய உதவிகள்

## அரசியல் நோக்கமானவை என்கிறது ஐ. நா.

புதுடெல்லி, நவ. 23—

வளர்ச்சி அடையும் நாடுகளுக்கு உதவி செய்யும நாடுகள், உதவி பெறும் நாடுகளின் தேவைகளை அனுசரித்து உதவி அளிப்பதில்லை,மாருக அரசியல் நோக்குடனேயேகொடுக்கப்படுகின்றன என்று ஐ நா ஆய்வு ஒன்று கூறுகிறது.

வளர்ச்சியடையும் நாடுகளுக்கு பல்வேறு வளமும் வாய்ப்பும் உள்ள நாடுகள் அளிக்கும் கடன் உதவிகள் பற்றி ஐக்கிய நாடுகள், ஆய்வு ஒன்றை நடத்தியது. அதில் மேற்கண்டவாறுகூறியுள்ளது.

இந்தியா, பங்களா தேஷ் போன்ற குறைந்த வருமானமுள்ள வளர்ச்சியடையும் நாடுகளுக்கு பொருத்தமற்ற முறையில் மிகப் குறைந்த அளவே உதவிகள் செய்யப்படுகின்றன, எனவே வளர்ச்சி அடையும் நாடுகளிடையே வேறுபாடுகள் அதிகரிக்கின்றன என்று அந்த ஆய்வு குறிப்பிடுகிறது.

### தனிநபர் வருமான கணக்கில்

தனிநபர் வருமானம் ரூ 100 டாலர் (ரூ 800) கொண்ட மக்கள் வளர்ச்சியடையும் நாடுகளில் அந்நாடுகளின் மொத்த ஜனத்தொகையில்(1971-ம்ஆண்டு கணக்கின்படி) 48 சதம்பேர் [78 கோடியே 10 லட்சம் பேர்] உள்ளனர். ஆனல், அந்நாடுகளுக்கு 1969முதல் 1972 வரை இருநாட்டு ஒப்பந்தங்களின் மூலம் வளர்ச்சியடைந்த தொழில் நாடுகள் செய்த உதவி 23 சதவீதத்திற்கும் குறைவு.

வளர்ச்சி அடையும் நாடுகளின் மொத்த ஜனத்தொகையில் 32 சதவீத மக்களைக் கொண்ட இந்தியாவுக்கு இரு நாட்டு ஒப்பந்த உதவிகளில் 13 சதவீதம் தான் கிடைத்தது.

தனிநபர் அடிப்படையில் பார்த்தால் 1969.முதல் 72-வரை சர்வதேச நிதி ஸ்தாபனங்களின் உதவியானது, வளர்ச்சியடைந்த நாடுகளைச் சேர்ந்த தனிநபர் ஒருவர் சராசரி 4 டாலர் (ரூ 32] என்றும் வளர்ச்சி அடையும் நாடுகளின் தனிநபர் சராசரி 2 டாலர் [ரூ16) என்றும் பெற்றுள்ளார் என்றும் ஐ நா வின் ஆய்வு கூறியுள்ளது.

அதே சமயத்தில்200டாலர் முதல் 400 டாலர் (3200ரூ) வரை தனிநபர் வருமானமுள்ள தென் கொரியா போன்ற நடுத்தர நாடுகள், அந்நாட்டின் தனிநபர் ஒருவர் சராசரி 9. 2 டாலர் (சுமார் ரூ 75] வீதம் உதவிகள் பெற்றுள்ளன என்பதையும் அந்த ஆய்வு சுட்டிக்காட்டுகிறது.

## அமெரிக்காவின் தரங்கெட்ட கோதுமை

## இந்திய மக்களின் தலைமையில்

வாஷிங்டன், நவ. 23—

பி எல் 480 என்ற அமெரிக்க சிலந்திவலை விதியின் அடிப்படையில் இந்தியாவுக்கு அமெரிக்கா கடனாக கொடுத்ததானியத்தில் மோசடித்தனம் நிகழ்ந்துள்ளது. எடைகுறைந்த, தரங்கெட்ட கோதுமை இந்தியாவின் தலையில் கட்டப்பட்டது.

இந்தியாவுக்கு தானியம் அனுப்பிய கமபெனியில் வேலை பார்த்த முன்னள் ஊழியர் ஒப்புக் கொண்டபடி எடைகுறைந்த தரங்கெட்ட தானியம் அனுப்பப்பட்ட நாடுகளில் இந்தியாவும் ஒன்று என்று நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை கூறியுள்ளது.

### வழக்கமாக நடக்குமாம்

நெக்ரோட்டோ என்பவர் தானியக்கம்பெனிகளின் நிர்வாகியாகவும், சூப்ரெண்டெண்டாகவும் வேலை பார்த்தவர். அவர் இந்தியாவுக்கு கப்பல் மூலம் அனுப்பப்படும தானியங்களிலெல்லாம் ஒவ்வொரு கப்பலிலும் 10 ஆயிரம் புஷெல்கள்(ஒரு புஷெல் என்பது சுமார் 20 படி) கோதுமை குறைத்தேஏற்றுமதி செய்யப்படும இதுவழக்கம்போல நடந்து வந்தது. ஒரு கப்பலில் 28 ஆயிரம் புஷெலகள்கூட குறைத்து அனுப்பப்பட்டது என்று கூறினர்.

மேலும் மட்டமான தானியங்களை எடைகுறைத்தும் அனுப்பும் நடவடிக்கைகளை தான்வேலையில் சேர்ந்த இரண்டாவது வருடத்திலிருந்து மேற்கொண்டதாகவும் தானியக் கம்பெனியின் லாபத்துக்காகவே அதனை மேற்கொண்டதாகவும் அவர் கூறினர். இவ்வாறு நெக்ரெட்டோ தானியக் கம்பெனியின் நலனுக்காக ஊழல் நடவடிக்கைகளில் ஈடுபடும் வகையில் அக்கம்பெனியின் உயர் அதிகாரிகள் அவருக்கு மறைமுக உத்திரவுகள் கொடுத்ததாகவும் அவர் கூறுகிருர்.

### இந்திய அரசு செய்ததென்ன?

இந்த அளவுக்கு எடைகுறைந்தும் தரங்கெட்ட கோதுமைகளை வாங்கிய அரசாங்கம் ஒருதட்வையேனும் அக்கோதுமையை இந்திய அரசு திருப்பி அனுப்பியதாக இல்லை. தரங்கெட்ட அத்தானியத்தை இந்திய மக்களின் தலையில் தான் கொட்டியது. இந்திய அரசாங்கம் உள்நாட்டில் உபரித் தானியமாக நிலப்பிரபுக்களின் கொட்டடியில் பதுங்கிக் கிடக்கும் தானியங்களை கட்டாயக் கொள்முதல் செய்யாமல் அன்னிய நாட்டு குறிப்பாக அமெரிக்க தானியங்களுக்கு தொண்ணுந்து கொண்டே இருக்கும இந்திய அரசாங்கம் எப்படித் திருப்பி அனுப்ப முடியும்?

தரமான கோதுமைஇல்லை என்பதற்காக அமெரிக்காவோடு செய்து கொண்ட தானிய ஒப்பந்தங்களையே ரத்து செய்தன சோவியத் யூனியனும், மக்கள் சீனமும்.

செய்ய முடியுமா இந்தியாவால்? சிலந்தி வலை போன்ற, வம்பில் மாட்டி வைக்கும் பி எல் 480என்னும அமெரிக்க விதியின் கீழ் தானிய இறக்குமதி செய்து கொள்ள ஒப்புக் கொண்ட இந்தியா தரங்கொட்ட தானியத்தை திரும்பி அனுப்புமா?

### தென் கொரியாவிலிருந்து

## படைகளைவாபஸ்பெற முடியாது

## அமெரிக்காவின் திமிர்

வாஷிங்டன், நவ. 20—

தென் கொரியாவிலிருந்து அமெரிக்கப் படைகள் வாபசாகிக் கொள்ள வேண்டும் என்ற ஐ நா பொதுச்சபையின் தீர்மானத்திற்கு அமெரிக்கா பணிப் போவதில்லை என்று அமெரிக்க வெளிநாட்டு இலாகா அதிகாரி ராபர்ட் பன்செத் என்பவர் கூறியுள்ளார்.

மேலும் ஐ நா பொதுச் சபையின் தீர்மானம்வெறும் சிபாரிசுகள்தானும் கட்டுப்படுத்தும் சக்தி உடையதல்லவாம். மேலும்கொரியா பிரச்னை மீது இரு வேறுபட்ட தீர்மானங்கள் எடுத்ததன் மூலம் ஐ நா பொதுச் சபை இரு கருனது பற்றி அவர் மிகவும் வருத்தப்படுகிருராம்.

இரு கொரியாக்களுக்கு மிடையே ஏற்பட்டுள்ள யுத்த நிறுத்த ஒப்பந்தை அமுல்படுத்துவதற்கே அமெரிக்கப் படைகள் தென் கொரியாவில் உள்ளதாம்.

## இந்திரா காங்கிரசுடன் இணையவே கூடாது

### கருத்தறியும் குழுவிடம் கோவை ஸ்தாபன காங். ஊழியர்கள் கருத்து

கோவை, நவ. 24—

ஸ்தாபனக் காங்கிரஸ் கட்சி ஊழியர்களின் கருத்தறியும் குழு, கடந்த 22-ந் தேதியன்று கோவை மாவட்டத்தில் ஊழியர்களையும் தலைவர்களையும் சந்தித்த பொழுது இந்திரா காங்கிரசுடன் இணையவே கூடாது என்று கருத்து தெரிவித்தனர்.

இச்சந்திப்பு பிரசிடெண்ட் ஹாலில் நடந்தது. மாவட்டத்தில் உள்ள கட்சிக் கிளைகளில் தலைவர்கள் 80-க்கு மேற்பட்டோர் கருத்துத் தெரிவித்தனர். மாவட்டம்முழுதுமிருந் துவந்திருந்த 1500-க்கு மேற்பட்ட ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

மாவட்ட சிவாஜி கணேசன் ரசிகர்கள் மன்றத்தின் அமைப்பாளர் ஜி வி பழனிசாமி, மாணவர் பிரிவு செயலாளர் ஜெகதீசன், திருமதி சரோஜினி, தாழ்த்தப்பட்டோர் லீக் அமைப்பாளர் கே பி பழனிச்சாமி ஆகியோர் இணைப்பை எதிர்த்தும், கட்சியைப் பலப்படுத்தவும் தாங்கள் தயார் என்று உறுதி கூறினர்.

இக்குழுவில் தமிழ் நாடு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் பி. ராமச்சந்திரன் பி ஜ கருத்திருமன், குமரி அனந்தன் உட்பட 10 பேர் உள்ளனர்.

## தனித்தே இயங்க வேண்டும்

### நீலகிரிமாவட்ட ஊழியர்கள் கருத்து

ஊட்டி, நவ. 24 —

இங்கு கருத்தறியும் குழுவினர் ஊர்வலமாக கல்யாணமண்டபத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு மாவட்ட ஊழியர்கள் கூட்டம் டாக்டர் மணியம் தலைமையில் நடந்தது.

இக்கூட்டத்தில் வட்டார நகர காங்கிரஸ் கமிட்டி தலைவர்களும், பஞ்சாயத்து போர்டு தலைவர்களும் இரு காங்கிரஸ் இணைப்புக்கு எதிர்ப்பு தெரிவித்தனர்,

ஜோதிகவுடர், திருமால் (குன்னூர்), ராமன்(உதகை), துரைச்சாமி(கூடலூர்), அஜ்ஜன், நஞ்சாகவுடர்(கோத்தகிரி), முனனாள் எம் பியான அக்கம்மாதேவி, பெல்லா கவுடர்(கட்டகாடு) ஆகியோரும சேவாதள தளபதி தக்கோலா, இளைஞர் காங்கிரஸ் அமைப்பாளர் கே எல் ஜோசி, மாதர் காங்கிரஸ் அமைப்பாளர்கள் தனலெட்சுமி, சரஸ்வதி, மாணவர் காங்கிரஸ் அமைப்பாளர் ராமன், ஆகியோரும் பேசும் போது இரண்டு காங்கிரஸ் இணைப்பு வேண்டாம். ஸ்தாபனக் காங்கிரஸ் தனித்தே இயங்க வேண்டும் என்று வற்புறுத்தினர்.

### மதுரை சிவாஜிரசிகர்கள்

## இணைப்புக்கு எதிர்ப்பு

மதுரை மாநகர் 21வது வட்டத்தில் சிவாஜி கணேசன் ஞாயிறு மன்றத்தின் உட்கிளையான சசிகுமார் நினைவு பாசறையைச் சேர்ந்தவர்கள் இரு காங்கிரஸ் இணைப்புக்கு கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர்.

கரிமேட்டில் கடந்த 22ந் தேதியன்று இணைப்பு எதிர்ப்புப் பொதுக்கூட்டம் ஒன்றும் ஸ்தாபன காங்கிரஸ் ஊழியர்கள் நடத்தினர்.

இந்திரா காங்கிரசில் சேரவோ, தடம் புரளவோ மாட்டோம் என்று மதுரை தாலுகா சிவாஜி கணேசன் மன்ற செயலாளர் கே பி ராஜு அறிக்கையொன்று விடுத்துள்ளார்.

### மதுரை மார்க்கெட்

## தேங்காய் எண்ணெய் விலை ஒரே மாதத்தில் படு உயர்வு

மதுரை, நவ. 22—

ஒரே மாதத்தில் தேங்காய் எண்ணெய் விலை ஒரு டின்னுக்கு 41 ரூபாய் உயர்ந்துள்ளது.

15 கிலோ எடையுள்ள ஒரு டின் தேங்காய் எண்ணெய் ஒரு மாதத்துக்கு முன்பு வரி உட்பட ரூ 123·90 ஆக இருந்தது. ஆனல்இப்போது ரூ 194·64 ஆக உயர்ந்துள்ளது. ரூ 40 74 கூடுதலாகியுள்ளது.

அதே போல் நயம் எண்ணெய்என்றுசொல்லப்படும் கொழும்பு தேங்காய் எண்ணெய் விலை ரூ145 ஆக இருந்தது. அது இப்போது ரூ 193 ஆக உயர்ந்துவிட்டது. அதாவது ரூ 48 கூடுதலாகியுள்ளது.

### தேங்காய்விலை கூடியது

தேங்காய்விலையும் பெருமளவில் உயர்ந்துவிட்டது. நூறு காய்கள் கொண்ட மூடை 60ரூபாய் வீதம்விற்ற சிறிய தேங்காய் விலை இப்போது ரூ. 100 ஆகவும், மூடை ரூ 80 வீதம் விற்ற நடுத்தர தேங்காய் விலை ரூ 120 ஆகவும், மூடை ரூ 110 வீதம் விற்ற பெரிய தேங்காய் விலை ரூ170 ஆகவும் உயர்ந்திருக்கிறது.

தேங்காய் மற்றும் தேங்காய்களின் விலை இன்னும் உயரும் என்றும் சொல்லப் படுகிறது.

### மேற்கு வங்க அரசு ஊழியர் தலைவர்கள்

## விடுதலை ஆனர்கள் ஆனல் வேலை இல்லை

கல்கத்தா, நவ. 24—

"மிசா"வின்கீழ் கைது செய்யப்பட்டு கடந்த ஜூலை முதல் சிறைக்காவலில் வைக்கப்பட்டிருந்த மேற்கு வங்க மாநில அரசு ஊழியர்கள் சங்க தலைவர்கள் 15 பேர் தற்போது விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.இவர்களில் மாநில அரசு ஊழியர்களின் இணைப்புக் குழுத் தலைவரும் ஒருவர்.

இவர்களை சிறையில் அடைத்துவிட்டு, அரசியல் அமைப்புச்சட்டம் 311[2](சி) யின் கீழ் அவர்களுக்குவேலை நீக்க உத்திரவுகளும் அளிக்கப்பட்டன.

தற்போது அவர்கள் விடுதலை செய்யப்பட்டுவிட்டபோதிலும், அவர்கள் மீதான வேலைநீக்க உத்தரவுகள்ரத்துச் செய்யப்படவில்லை.

எனவே அவர்கள் மீதான வேலைநீக்க உத்திரவை ரத்துச்செய்து அவர்களுக்கு மீண்டும் வேலைதரக் கோரி மாநில முதலமைச்சரை மாநில இணைப்புக்குழு கேட்டுக் கொண்டுள்ளது.

ஆதாரம்; 'கணசக்தி' 17—11—75

## அமைதி ஏற்படவில்லை என்கிருர் அமைச்சர்

ஹவுப்ளி, நவ. 23—

நாட்டில் ஒவ்வொரு விஷயமும் வெளிப்படையில் அமைதியாக இருப்பதாக தோன்றக் கூடும். ஆனல் உண்மையில் அவ்வாறு அமைதி ஏற்பட்டுவிடவில்லை. எனவே, அரசாங்கம் தற்போதைய நிலைமைகள் பற்றி கவனமாக கவனித்து வருகிறது, சந்தர்ப்பத்தில் அரசாங்கம் பலமான நடவடிக்கை எடுக்கவே விரும்புகிறது என்று மத்திய உள்துறை இலாகாவின் துணை அமைச்சர் மோசின் என்பவர் கூறினர்.

மேற்கு வங்கத்தில் உள்ள இங்கரில் காங்கிரசுக் கட்சி ஏற்பாடு செய்த கூட்டமொன்றில் பேசும்போது மேற்கண்டவாறு கூறியுள்ளார்.

### குடிநீர் வடிகால் வாரியம்:

## இளநிலை பொறியாளர் வேலைக்கு ஆபத்து?

மதுரை, நவ. 24—

அண்மையில் 300 ஊழியர்கள ஆட்குறைப்பு செய்யப்பட்ட தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தில் தற்போது இளநிலைப் பொறியாளர்களையும் ஆட்குறைப்புச் செய்யும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

### சென்னைக்கு படையெடுப்பு

கடந்த இரண்டு ஆண்டு காலத்துக்குள் தமிழ்நாடு முழுவதும் இவ்வாரியத்தில் வேலைநியமனம் ஆகியுள்ள இன்சீனியரிங் (பி இ) பட்டம் பெற்ற 190 இளநிலைப் பொறியாளர்களையும் டிப்ளமா பட்டம் பெற்ற 23 இளநிலைப் பொறியாளர்களையும் சென்னையில் உள்ள குடிநீர்வடிகால் வாரிய தலைமையகத்துக்கு வரும்படி உத்திரவுகள் வந்துள்ளனவாம். அதன்படி இந்த 213 இளம் பொறியாளர்களும் கடந்த ஞாயிற்றுக்கிழமை சென்னைக்குப் பயணமாகினர். இவர்களில் கிட்டத்தட்ட 50பேர் ஆட்குறைப்புச் செய்யப்படலாம என்று பேசப்படுகிறது.

### நெஞ்சம் பதைபதைக்க

வேலை கிடைத்த மகிழ்ச்சியில்—சிலர் திருமணமும் முடித்து குதூகலமாக இருக்கின்றனர்—இருக்கும் இந்த இளநிலை பொறியாளர்கள் உள்ளம் பதைபதைக்கச் சென்னைசென்றுள்ளனர்.

—ந. நி

### ஸ்தாபன காங்கிரஸ்:

## ஆய்வுகுழுவில் கலந்து கொள்ள சிலர் மறுப்பு

சென்னை, நவ. 22—

தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் கட்சி காரிய கமிட்டியின் முடிவுப்படி ஆக்கட்டி ஊழியர்களின் கருத்தறியும் ஆய்வுக் குழுவின் சுற்றுப்பயணத்தின் சிலர் கலந்து கொள்ளவில்லை.

அக்கட்சியின் இருசெயலாளர்கள் ப நெடுமாறன், திண்டிவனம் ராமமூர்த்தி, பொருளாளர்கே ராஜாராம் நாயுடு, தாழ்த்தப்பட்டோர் பிரிவு அமைப்பாளர் ஆர் எஸ் ஆறுமுகம், கே அப்பன்ராஜ், குடந்தை ராமலிங்கம், கவிஸ்தலம் கருப்பையா மூப்பனர் ஆகியோர் இக்குழுவை பகிஷ்கரித்துள்ளனர்.

### அடுத்த ஆண்டு ஒன்றுபட்ட வியட்நாமில்

## பொதுத் தேர்தல்

ஹோ-சி-மின் நகர், நவ. 24—

ஒன்றுபட்ட வியட்நமில் அடுத்த ஆண்டு (1976-ல்) தேசிய ரீதியிலான பொதுத் தேர்தல் தேசிய அசெம்ளிக்கு நடக்கும் என்று கடந்த 21-ந் தேதியன்று இங்கு அறிவிக்கப்பட்டது.

### புதிய அரசியல் சட்டம்

நாட்டின் உயர் நிர்வாக அமைப்பான இந்த தேசிய அசெம்ளி ஒன்றுபட்ட வியட்நம நாட்டுக்கான புதிய அரசியல் சட்டத்தையும் உருவாக்கும்.

## காஞ்சீபுரத்தில்

29—11—75 மாலை 6மணிக்கு

தோழர்கள்

**வி. பி. சிந்தன்**

**கே எஸ் பார்த்தசாரத்**

பேசுவர்

இடம்; காந்திரோடு தேரடிக்கு அருகில்

# தீக்கதிர்

## எவர் மெய்யர்? எவர் பொய்யர்?

ஒருவர் மத்திய அரசின் நிதி அமைச்சர் சி சுப்ரமண்யம். மற்றவர் ரிசர்வ் வங்கியின் கவர்னர், எஸ் ஜெகன்னுதன்.

முன்னவர் முரசறைந்து கூறுகிருர்— விலைவாசிகளைக் கட்டுப்படுத்திவிட்டோம்; உலகத்தில வளர்ந்த நாடுகள், வளரும்நாடுகள் ஆகியவற்றில் எதுவுமேசாதிக்க இயலாததைச் சாதித்துவிட்டோம். விலைவாசிகளை கட்டுப்படுத்தியதோடு நில்லாமல் அவை குறையும்படியாகவும் செய்து விட்டோம்.— என்று. இது அவர் நம்நாட்டுக்குள் மட்டும் செய்து வரும் பிரச்சாரமல்ல. அண்மையில் அமெரிக்கா சென்றிருந்த சமயத்திலும் இப்பெரும் சாதனையை விளம்பரப்படுத்தினுர். அவரைத்தொடர்ந்து அமெரிக்கா சென்ற திருவாளர் யஷ்வந்தராவ் சவான் அவர்கள் ஐக்கிய நாட்டுப் பொதுச் சபையின் மேடையிலிருந்தே இப்பிரச்சாரத்தைச் செய்தார். நாட்டின் பிரதமரும் அவர் சந்திக்கும் வெளிநாட்டு பத்திரிகை நிருபர்களிடமெல்லாம் வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் இதனையே கூறுகிருர்.

டில்லியிலே சில நிருபர்கள் திரு சி சுப்ரமண்யத்தை நெருக்கி சில்லறை விலைகளில் ஒரு மாற்றத்தையும் காணுேமே என்ற பொழுது, அவர் "மொத்த விலைகள் விழுந்து விட்டன! சில்லறை விலைகளில் இந்த வீழ்ச்சி பிரதிபலிக்க சிறிது அவகாசம் தேவைப்படலாம்" என்று மழுப்பினுர். அப்பொழுதும்கூட மொத்த விலைகள் விழுந்துவிட்டன என்பதை அடித்துக்கூறினுர்.

இப்பொழுது ரிசர்வ் வங்கியின் கவர்னர் இதர வங்கிகளுக்கு ஒரு கடிதம் அனுப்பியுள்ளார். ரிசர்வ் வங்கியின் வழிகாட்டுதலின்படிதான் நாட்டில் உள்ள அனைத்து வங்கிகளும நடக்கவேண்டும். அந்த கவர்னரது பெயர் எஸ் ஜெகன்னுதன். அக்கடிதத்தில் வங்கிகளின் கடன் கொள்கையில் சில மாற்றங்கள் தேவை என்று கூறியுள்ளார். மேலும் "ஒட்டு மொத்தமான பொருளாதார நிலை குறித்து திருப்தி மனே நிலை கொள்ளலாகாது" என்றும், **"1975 மார்ச் முதல் மொத்த விலைகள் ஏறத்தாழ மாருத நிலையிலேயே இருக்கின்றன"** என்றும் குறிப்பிட்டுள்ளார். தயவு செய்து வாசகர்கள் இந்த வாசகத்தைத் திரும்பத் திரும்பப் படித்துப் பாருங்கள். இதனைக் கூறியிருப்பவரோ ரிசர்வ் வங்கியின் கவர்னர். அங்குதான் நாட்டின் பொருளாதார நிலைகள் குறித்தும், தொழில் வேளாண்மை ஆகியவற்றின் உற்பத்தியளவுகள் குறித்தும், சரக்குகளது வர்த்தகம் குறித்தும் விலைகளது ஏற்றம் இறக்கம் — சகல விவரங்களும் வந்து சேரும் இடம். அங்கிருந்துதான் நிதி அமைச்சகம் தனக்கு வேண்டிய தகவல்களை பெற்றுக் கொள்கின்றது. அப்படிப்பட்ட மையத்தின் பொருப்பாளரான திரு ஜெகன்னுதன், சி சுப்ரமண்யம் அவர்களது கூற்றின் அடிப்படையையே தகர்த்துவிட்டார். அவரது கடிதம் நவம்பர் முதல் வாரம் எழுதப்பட்டது என்பதையும் மறந்து விடாதீர்கள்.

எவர் மெய்யர், எவர் பொய்யர் என்று நாம் விளக்கமாக பிளந்து சொல்லத் தேவையில்லை.

இன்னும் நெருக்கமாகப் பரிசீலித்தால் ரிசர்வ்வங்கியின் கவர்னர்கூட முழு உண்மையைச் சொல்லக் கூச்சப்படுகிருர். இதோ முழு உண்மை. 1961—62 வருடத்தில மொத்த விலை குறியீட்டெண் 100என்று கொண்டால், 1975 மார்ச் மாதம் கடைசி வாரத்தில் (அவசரகால பிரகடனத்துக்கு மூன்று மாதங்களுக்கு முன்), மொத்த விலைகளதுகுறியீட்டுஎண் **306·3 ஆக** இருந்தது, 1975 அக்டோபர் 19ந் தேதியுடன் முடிந்த வாரத்தில இந்த குறியீட்டுஎண் **308·3 ஆக உயர்ந்துள்ளது.** அதாவது அவசரகால பிரகடனத்துக்கு 4 மாதங்களுக்கு பின்னர். அந்தப் பிரகடனத்துக்கு மூன்று மாதங்களுக்கு முன் இருந்ததைவிட **2 புள்ளிகள் உயர்ந்துள்ளன,**

"சத்தியமேவ ஜெயதே" என்று வடமொழியிலும் "உண்மையே வெல்லும்" என்று தூய தமிழிலும்- அசோக சக்கரம் என்ற தர்மசக்கரம் பொறித்த நம்நாட்டின் ஆட்சிச் சின்னம் பறைசாற்றுகிறது. ஆட்சியில் வீற்றிருக்கும் மூத்த அமைச்சர் பெருமக்களோ இப்படி கூசாமல் பொய் பேசுகின்றனர்; பொய்யைப் பரப்புகின்றனர்.

(அண்மையில் குறுவை அறுவடையாகி சந்தைக்கு வந்திருப்பதால்தான்யங்களின் விலைகளில் ஏற்பட்டுள்ள குறைவைக் கண்டு ஏமாறவேண்டாம் என்று மக்களை எச்சரித்துக் கொள்கின்ரேம், அவை மீண்டும் ஏறுவதற்கு வேண்டிய வழி வகைகள் செய்யப்பட்டு வருகின்றன என்றும் எச்சரிக்க விரும்புகிரேம்)

---

### உளவு வேலைகளை
## விருத்தி செய்யவேணடும் மத்திய அமைச்சர் கூறுகிருர்

புதுடெல்லி, நவ. 22—

உளவுத் தகவல்களை சேகரிப்பதை விரைவாகவும் சரியாகவும் காண்பதற்கான வழிகளை விருத்தி செய்ய வேண்டும் என இந்திய உள்துறை அமைச்சர் பிரமானந்தரெட்டி கூறினுர்.

உதவி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்களின் நாள் மாநாட்டில் நவ 19ல் பேசியபோது மேற்கண்டவாறு கூறினுர்.

செய்திகளை சேகரிப்பது என்பது போலிசின் மிக முக்கிய வேலை, அது இல்லாமல் சரியான நடவடிக்கையோ என்பது சாத்தியமில்லை என்றும் கூறினுர்.

மேலும், மத்திய மாநில அரசுகளின் போலிஸ்படைகள் இணைந்து செயல்பட வேண்டியது அவசியம் என்றும் வலியுறுத்தினுர்.

உள்நாட்டு பாதுகாப்பும் வெளிநாட்டு பாதுகாப்பும் ஒரு நாணயத்தின் இரு பாகங்கள் என்ருர் அமைச்சர் பிரமானந்தரெட்டி.

---

### வளர்ச்சியடையும் நாடுகளில்
## இந்தியதொழில்நுட்பம்விலைபோக ஏகாதிபத்திய நாடுகள் உதவி

புதுடெல்லி, நவ. 23— இந்தியாவின் தொழில் நுட்பங்களை எப்படி எங்கெங்கு நாடுகளிடம் விலை போகச் செய்வது என்பது பற்றி தெரிந்து கொள்ள இந்திய தொழில் நுட்ப நிபுணர்கள் ஏகாதிபத்திய நாடுகளான அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு, ஜப்பான, மேற்கு ஜெர்மனி,பெல்ஜியம் ஆகிய நாடுகளுக்கு செல்லவிருக்கின்றனர்.

**மேலும் விரிவுபடுத்தவே**

எண்ணெவளஅரபுநாடுகள் ஏனைய ஆப்பிரிக்கா நாடுகள் மற்றும் இந்தோனேஷியா, மலேசியா ஆகிய நாடுகளில் இந்திய முதலாளிகள் மூலதனமிட்டு தொழில் ஆரம்பித்துள்ளனர். அதன் தொடர்ச்சியாகஅந்நாடுகள் சொந்தமாக ஆரம்பிக்கும் தொழில்களுக்கு இந்திய முதலாளிகள் தங்களுடைய தொழில் நுட்பங்களையும் விற்பனை செய்து வருகிருர்கள்.

**இந்திய ஏற்றுமதியாளர்க்கு அழைப்பு**

இத்தொழிலை மேலும் விரிவுபடுத்தும் பொருட்டே இந்திய நிபுணர்கள் அமெரிக்கா, பிரிட்டன் போன்ற ஏகாதிபத்திய நாடுகளுக்கு ஆய்வு நடத்தச் செல்கிருர்கள்,

இத்தகைய ஆய்வு ஒன்றை நடத்திக் கொள்ள இந்திய தொழில் நுட்ப நிபுணர்களை அமெரிக்காவும் அந்நாடுகளின் சர்வதேச வர்த்தக நிலையம் என்னும் ஸ்தாபனம் இந்திய ஏற்றுமதி அமைப்புகளின் சம்மேளனத்திடம் ஏற்கனவே கூறியுள்ளது,

இந்தியாவிலிருந்துசெல்லும் தொழில் நுட்ப நிபுணர்கள் அந்நாடுகளின் 6 மாத காலம் ஆய்வு நடத்துவர். அப்போது எந்தெந்த வளர்ச்சியடையும் நாடுகளுக்கு எந்தெந்த தொழில் துறையில் எப்படியெப்படி தொழில் நுட்ப நுணுக்கங்களை விற்கலாம் என்பது பற்றி பயிற்சி பெறுவார்கள். அத்தோடு, வளர்ச்சியடைந்த நாடுகளுக்குதொழில் நுட்பங்களை விற்பனை செய்வதற்கான வகையில் இங்கிலுள்ளவர்கள் குழு அந்நகரகாதிபத்திய நாடுகளிடம் தொழில்நுட்ப பயிற்சியும் பெறும். அதே நேரத்தில்எந்தெந்தவளர்ச்சியடையும் நாடுகள் ஆரம்பிக்கும்தொழில்களில்இந்திய உதவி காண்ட்ராக்ட் எடுக்கும் சாத்தியப்பாடுகள் உள்ளனஎனபதுபற்றிஇந்தியநிபுணர்கள் அறிக்கைதருவார்களாம்.

**இரண்டு பிரதிநிதிகள்வீதம்**

பெட்ரோலியம், ரசாயனம், கன இஞ்சினியரிங், உலோகப் பொருட்கள், எண்ணைகண்டுபிடிப்பு,சிவில் எஞ்சினியரிங், சுரங்கம் ஆகியவைகள் சம்பந்தப்பட்ட தொழில் நுணுக்கங்களை வளர்ச்சி அடையும் நாடுகளுக்கு விற்பனை செய்யும் பொருட்டே இந்திய தொழில் நுட்ப நிபுணர்கள் ஏகாதிபத்திய நாடுகளில் பயிற்சிபெற செல்கின்றனர்.

இந்த அடிப்படையில் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு மேற்கு ஜெர்மனி, பெல்ஜியம்,ஜப்பான் ஆகிய நாடுகள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு தொழில் நுட்ப நிபுணர்கள் ஒதுக்கப்பட்டுள்ளனர்.

**அவர்களுக்கே வெளிச்சம்**

வளர்ச்சி அடையும் நாடுகளுக்கு தொழில் நுட்பங்கள் விற்பனை செய்யும் அந்நாடுகளில் மூலதனமிட்டும் தொழில் நுட்பங்களை கொடுத்த நாடுகள் மேலே குறிப்பிடப்பட்ட வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகள். இன்று அதே நாடுகள், வளர்ச்சியடையும் நாடுகளுக்கு தொழில் நுட்பங்களை விற்பனை செய்ய ஆகப்பெரிய வளர்ச்சியடையும் நாடான இந்தியாவுக்குபயிற்சி அளிப்பதன் பின்னணி என்னவோ? இன்று உலகெங்கும் ஏகாதிபத்திய எதிர்ப்பு அலை வீசுவதால் வளர்ச்சியடையும் நாடான இந்தியாவின் பின்னுல் ஒளிந்து கொண்டு நுழையத் திட்டமோ என்னமோ? இதுவெல்லாம் வளர்ச்சியடையும் இந்திய முதலாளித்துவத்துக்கும் அவ்வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளுக்குமே வெளிச்சம்.

---

## இரயில்வே வருமானமும் மூலதனமும் பெருகியும் தொழிலாளர்கள் வாழ்வு மலரவில்லையே பொதுக்கட்டத்தில் வருத்தம்

மேட்டுப்பாளையம், நவ. 24—

இரயில்வேத் துறையில் மூலதனம் பெருகியும்—வருமானம் அதிகரித்தும் இரயில்வேசிப்பந்திகளின் தொழிலாளர்களது வாழ்வு மலரவில்லையே என்று இங்கு நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் வருத்தம் தெரிவிக்கப்பட்டது.

தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் (சி ஐ டி யூ) சார்பில் அண்ணமலை திட்டில் நடந்த இப்பொதுக்கூட்டத்திற்கு தோழர் அப்புக்குட்டன் தலைமைவகித்தார்இரயில்வே தொழிலாளர்தலைவர்தோழர் ஏ. ரஜகோபால் கலந்து கொண்டு பேசினுர்.

இரவு பகலென்று பாராமல் இரயில்வே தொழிலாளர்கள் 24மணிநேரமும் தண்டவாளத்தில் தங்களது உதிரத்தை வியர்வையாகக் கொட்டி வேலை செய்ததாலேயே இரயில்வேயின் மூலதனமும், வருமானமும் பெருகியது. மூலதனம் 4 மடங்காக உயர்ந்துள்ளது 1960ல் 11 ஆயிரமாக இருந்த இன்சின்களதான் 1971ஆம் இருந்து 1960-ல் 3லசட்சுமாக 3ஆயிரமாக இருந்த வாகன இன்னும் அப்படியேதான் உள்ளன. 1963ல் 28ஆயிரமாக இருந்த பயணிகள் பெட்டிகள் 1974ல் 36ஆயிரமாகததான உயர்ந்துள்ளன.

ஆனாலும் கடந்த 15 ஆண்டுகளில் தொழிலாளர்களது உழைப்பின் பலனால் 8800கோடி டன்னுக இருந்த சரக்கு போக்குவரத்து 12,500 கோடி டன்னுக உயர்ந்துள்ளது. பயணிகள் இரயில் 7,800 கிலோ மீட்டரிலிருந்து 13,600 கிலோ மீட்டராக உயர்ந்துள்ளது. ஆனாலும் தொழிலாளர்களது வாழ்க்கை நிலை உயரவில்லை.

3000 ஆயிரம் கோடி ரூபாய்க்குமேல் மூலதன மிடப்பட்டுள்ள இந்த மாபெரும் பொதுத்துறையில் தொழிலாளர்களது வாழ்க்கை பிரகாசமாகிட இந்திய அரசு தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். அவர்களுக்காக, அங்குமிங்குமாக சில சில்லறை சீர் திருத்தங்கள் செய்யப்படுவதை விடுத்து உருப்படியான பயனுள்ள நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இவ்வாறு வலியுறுத்திப்பேசினர்.

---

## நெய்வேலி கூட்டத்தில் பி. ஆர்.

நெய்வேலி, நவ. 2— நெய்வேலி,வட்டம்17-ல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கடந்த 14-ந் தேதி நடந்த அரசியல் நிலை விளக்கப் பொதுக்கூட்டத்தில், கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்திகலந்துகொண்டு இன்றைய அரசியல் நிலைகளையும், அரசியல் போக்குகளையும் விளக்கினுர்.

தொழிலாளர்களது — தொழிற்சங்கங்களது உரிமைகள் பறிக்கப்பட்டுள்ளதைக் கண்டித்தார். உழைக்கும் மக்களின் ஒன்றுபட்ட இயக்கத்தின் மூலமே சலுகைகளையும் கோரிக்கைகளையும் அடைய முடியும் என்று உணர்த்தினுர்.

நெய்வேலிசிஐடியூசெயலாளர் தோழர் திருவேங்கடமும் இக்கூட்டத்தில் பேசினுர்.

## ஜனவரி 31-வரை ஊர்வலங்களுக்கு தமிழகத்தில் தடை

சென்னை, நவ. 2— தமிழகத்தில் பொது ஊர்வலங்கள் நடத்துவதற்கும், அவற்றில் கலந்து கொள்வதற்கும் தமிழ்நாடு அரசுதடை விதித்துள்ளது. இத்தடை 1976 ஜனவரி 31ந் தேதி வரை அமுலிலிருக்கும்.

திருமணம், இறுதிச் சடங்கு, மற்றும் மதம் சம்பந்தப்பட்ட ஊர்வலங்களை இத்தடை உத்திரவு கட்டுப்படுத்தாது.

---

## பீகார் வெள்ள நிவாரண நிதி

பீகார் மாநிலத்தில்
அண்மையில் ஏற்பட்ட
பயங்கர வெள்ளப்பெருக்கு
—அதன் விளைவாக உயிர்பலி
உடைமைச் சேதம்
சொல்லொண்ணு துயரம்
இவற்றிற்கு ஆட்பட்டு
துயருறும்
பீகார் மாநில மக்களுக்காக
சி ஐ டி யூ திரட்டிவரும்
நிவாரண நிதிக்கு
அள்ளித் தாரீர்

### ஈரோட்டிலிருந்து ரூ. 80

தமிழ்நாடு மின்சாரத்தொழிலாளர் சங்கத்தின ஈரோடு கிளைசார்பில் ரூபாய் எண்பது அனுப்பி வைக்கப்பட்டது.

நிதி அனுப்ப வேண்டிய முகவரி;—

Com. Ras Behari Singha dvocate,
CONVENOR, BIHAR PEOPLE's
RELIEF COMMITTEE BAILEY ROAD,
PATNA BIHAR STATE

---

## திருப்பூர் வடக்குப் பகுதியில் சைக்கிள் பிரச்சாரம்

திருப்பூர், நவ. 24— சி ஐ டி யூவைச் சார்ந்த ஏராளமான தோழர்கள் திருப்பூர் வடக்குப் பகுதியில் உள்ள சுமார் 50 கிராமங்களுக்கு சைக்கிள் அணியாகச் சென்று பிரச்சாரம் செய்தனர்,

இன்று நாட்டையும் நாட்டு மக்களையும் பற்றியிருக்கும் நெருக்கடி பற்றி விளக்கினர். அதற்கான காரணங்களை எடுத்துக் கூறினுர்கள். இந்த நெருக்கடியிலிருந்து மீள ஸ்தாபன ரீதியில் உழைக்கும் மக்கள் அணி திரளவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினர்.

பிரச்சாரக் குழுவினர் கவிஞர் தணிகைச்செல்வன் எழுதிய 'நடையளந்து ஊர்தோறும் வருகிருேம்' என்ற பாட்டுடன் புறப்பட்டனர்.

கடந்த 15, 16, 17 தேதிகளில் நடந்த இந்த பிரச்சார அணிக்குமுறையே, தோழர்கள் எஸ் சுப்பையன், எஸ் அருணசலம், ஆர் பொன்னுச்சாமி ஆகியோர்தலைமை வகித்தார்கள்.

முதல் நாளன்று 25 தோழர்கள் அனுப்பர்பாளையம், குத்தம்பாளையம்உட்பட 18 கிராமங்களுக்குச்சென்று அரசியல் விளக்கம் அளித்தனர். இறுதியில் ஒட்டபாளையத்தில் பொதுக் கூட்டம் நடந்தது. குத்தபாளையத்தில் டாத்திரத் தொழிலாளர்களும், விவசாயத் தொழிலாளர்களும் தாரதப்பட்டை முழங்க சைக்கிள் அணியினரைஊர்வலமாக அழைத்துச் சென்றனர்.

இரண்டாம் நாள் 32 தோழர்கள் 17 கிராமங்களில் பிரச்சாரம் செய்தனர். கடைசியில் பெருமாநல்லூரில் பொதுக்கூட்டம் நடந்தது.

இக்கூட்டங்களில் கட்சியின் பிரதேசக் கமிட்டிச் செயலாளர் கே எஸ் கருப்பசாமி, எஸ் அருணசலம், எஸ் சுப்பையன், எம் ஈஸ்வரன், மனேகரன் ஆகியோர் பேசினர். மூன்ரும் நாள் 32 தோழர்கள் 15 கிராமங்களுக்குப் பிரச்சார அணியாகச் சென்றனர்.

---

## ஆசிரியருக்கு...

### மீணடும் மின்னெளிகிடைக்குமா?

ஐயா,

மதுரை மாவட்டம் பெரியகுளம் நகராட்சியில் பணி புரியும் நகரசுத்தி தொழிலாளர்கள் வடகரையிலும், தென்கரையிலும்உள்ளகுடியிருப்பு காலனிகளில் வசித்து வருகின்றனர்.

இந்த இரு காலனிகளிலும் உள்ள மக்கள்—குறிப்பாக பெண்களும் வயோதிகர்களும் பெரிதும் சிரமப்படுகிருர்கள். பொழுது போய் விட்டால் வெளியே வரமுடியாது. வீடுகளோ— பெரும்பாலும் எல்லாவற்றிற்கும் சரியான கதவுகள், ஜன்னல்கள், சுவர்கள் இல்லை. எல்லாம்ரிப்பேர்.இதனுல்,உள்ள சட்டிபொட்டிகளுக்கும்திருடர்களால் ஏற்படும்தொல்லையும் அதிகரித்து வருகிறது. தவிர தண்ணீர்எடுக்க பெண்கள் அதிக தூரம் செல்ல வேண்டும்.

எனவே, இந்த நிலைமைகளை கணக்கில் எடுத்து, இருகாலனிகளிலும்உடனே மினனெளி கிடைக்கவும், தண்ணீர்வசதிகாலனிக்குள்ளேயே ஏற்பாடு செய்யவும், வீட்டு மராமத்து வேலைகளை உடனேபார்க்கவும்நகராட்சி ஆணையாளரும் அதிகாரிகளும் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

இவண்.
ஆர். அழகர்
நகரசுத்தி தொழிலாளர் சங்கச் செயலாளர்
பெரியகுளம்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்கசிஸ்ட்] தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் [6/16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுடவர் ஆசிரியர் எம் ஆர் வெங்கட்ராமன்.

---



---

## பாரி தொழிலாளர் போராட்டம் நிதி குவியட்டும்!

ஆட்குறைப்பு, லே-ஆப் ஆகிய இரண்டையும் எதிர்த்து கடந்த 5 மாத காலமாகப்போராடி வரும் நெல்லிக்குப்பம் பாரிமிட்டாய்த்தொழிலாளர்களுக்கு சகோதர ஆதரவைத் தெரிவிக்கும் பொருட்டு சி ஐ டி யூ சங்கங்கள் நிதி அனுப்பி வருகின்றன. இப்பிரச்னையில் தலையிட்டு தீர்வு காணக்கோரி முதலமைச்சருக்கு தந்திகளும் கொடுத்துள்ளன. நிதி அனுப்பிய சங்கங்கள் விபரம் வருமாறு:—

| | ரூ.—பை. |
|---|---|
| அரசுப் போக்குவரத்து ஊழியர்கள் சங்கம், சென்னை | 10—00 |
| பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் இராஜபாளையம் | 5—00 |
| அச்சுத் தொழிலாளர் சங்கம், சிவகாசி | 10—00 |
| துப்பாக்கித் தொழிற்சாலை தொழிலாளர் சங்கம் திருச்சி 16. | 10—00 |
| சிதம்பரம் நகர தொழிலாளர் சங்கம் | 5—00 |
| சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி, அரக்கோணம் | 10—00 |
| மத்திய தர வர்க்கம், தஞ்சை நகர் | 50—00 |
| எண்ணூர் மின்சாரத் தொழிலாளர் சங்கம் | 51—00 |
| என் சி ஆர் எல் எம்ப்ளாயீஸ் யூனியன், வடலூர் | 50—00 |
| மதுரை பஞ்சாலை தொழிலாளர் சங்கம், பழனி கிளை | 5—00 |
| சென்னை—செங்கை மாவட்ட பீடித் தொழிலாளர்சங்கம். திருவள்ளூர்கிளை | 10—00 |
| ஒமேகா இன்ஸுலேட்ட் கேபிள் ஊழியர் சங்கம் சென்னை | 10—00 |
| வடஆற்காடு மாவட்ட மோட்டார் தொழிலாளர் சங்கம் | 5—00 |
| எஸ். சிவானந்தம், காந்திபுரம், கோவை-12 | 10—00 |
| சேலம் மேக்னிசைட் தொழிலாளர் சங்கம் | 10—00 |
| சுண்ணாம்புக்கல் சுரங்க கெமிக்கல் லேபர் யூனியன்,திருச்செங்கோடு | 5—00 |
| வடஆற்காடு மாவட்ட பீடித் தொழிலாளர் சங்கம் | 10—00 |
| வடலூர் சேஷசாயி தொழிலாளர் சங்கம் | 50—00 |
| பெடல் பவுடர் கம்பெனிதொழிலாளர் நலஉரிமைச் சங்கம், மதுரை-1 | 5—00 |
| கே. ஆர். எஸ். நாடா கம்பெனி தொழிலாளர் சங்கம், திருச்சி | 5—00 |
| யூனியன் கார்பைடு ஊழியர் சங்கம் சென்னை-81 | 10—00 |
| எஸ்.வி. மில்ஸ் தொழிலாளர் சங்கம் உடுமலைப்பேட்டை | 5—00 |
| தமிழக அரசுபோக்குவரத்து தொழிலாளர் சங்கம், நாகர்கோவில் | 10—00 |

### தந்திகள் அனுப்புக!

முதலமைச்சருக்கு அனுப்ப வேண்டிய தந்தி வாசகம்:

PRAY INTERVENE IMMEDIATELY IN PROLONGED STRIKE OF NELLIKUPPAM PARRYS CONFECTIONERY EMPLOYEES